Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**வன்முறை**

இரு பக்கமும் கூர்மை பொருந்திய கத்தியைப் போன்றது வன்முறை. தூண்டிவிடுவோரையே அது பதம் பார்த்து விடும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**புரட்சி**

புரட்சி என்றால் ஒரு விஷயம் அதன் பழக்க வழக்க நிலைகளில் ருந்து மாற்றமடைவதாகும்.

-தந்தை பெரியார்

மலர் : 7 சென்னை 26 - 4 - 83 செவ்வாய் வெளியூர் 27 - 4 - 83 புதன் இதழ்: 187

### வரலாற்றுச் சிறப்புப் பெற்ற

# கிருஷ்ணா நதிநீர் திட்ட ஒப்பந்த முழுவிவரம்

## சட்டசபையில் முதல்வர் புரட்சித்தலைவர் அறிக்கை

**சென்னை, ஏப். 26- வரலாற்றுச் சிறப்புமிகு கிருஷ்ணா நதிநீர்த் திட்ட ஒப்பந்தத்தின் முழு விவரங்களை சட்டசபையில் முதல்வர் புரட்சித்தலைவர் விவரித்தார். இத்திட்டம் காலவரையற்றது நிரந்தரமானது என்று முதல்வர் குறிப்பிட்டார்.**

சென்னை நகரின் குடிநீர் தேவையைப்பூர்த்தி செய்ய கிருஷ்ணா நதியிலிருந்து தண்ணீர் எடுத்து வரும் திட்டத்திற்காக முதல்வர் புரட்சித்தலைவர் ஆந்திரா சென்று வரலாற்று சிறப்புமிகு ஒப்பந்தத்தை ஏற்படுத்தியது தெரிந்ததே.

இந்த ஒப்பந்த விவரம் குறித்து எதிர்க்கட்சிகள் கேட்டுக் கொண்டதற்கிணங்க சட்டசபையில் புள்ளி விவரம் கொண்ட அறிக்கையை முதல்வர்புரட்சித் தலைவர் இன்று தாக்கல் செய்தார். முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் டாக்டர் நாவலர் அந்த அறிக்கையைப் படித்தார்.

அறிக்கையில் புரட்சித் தலைவர் கூறியிருப்பதாவது:-

18-4-83ல் ஹைதராபாத்தில் ஆந்திர மாநில முதல்வர் என உடன்பிறப்பு என். டி. ராமாராவ் அவர்களுடன் நானும், சம்பந்தப்பட்ட அமைச்சர்களும், அதிகாரிகளும் பேச்சுவார்த்தை நடத்தினோம். இக்கூட்டத்தில் சென்னைக்கு கிருஷ்ணா நதியிலிருந்து குடிநீர் வழங்கும் திட்டத்திற்கான ஒப்பந்தம் ஏற்பட்டது.

ஒப்பந்தத்தில் குறிப்பிடத் தக்க அம்சங்கள் வருமாறு:-

சென்னைக்கு குடிநீர் கொண்டுவரும் கால்வாய் ஆந்திர பிரதேசம் கடப்பை தாலுகாவிலுள்ள சென்ன முக்க பள்ளி என்ற கிராமத்தின் அருகிலிருந்து வெட்டப்படும். ஸ்ரீசைலத்திலிருந்து சென்ன முக்க பள்ளிவரை தண்ணீர் கொண்டுவருவதற்கு செய்ய வேண்டிய ஏற்பாடுகளை ஆந்திர பிரதேசம் முடிவு செய்யும்.

சென்ன முக்க பள்ளியிலிருந்து பென்னாற்றில் உள்ள சோமசீலா நீர்த்தேக்கம் வரை தமிழ் நாட்டிற்காக ஒரு தனி கால்வாய் வெட்டப்படும். தற்போது கட்டப்பட்டு வரும் இந்த சோமசீலா நீர்த்தேக்கம் சென்னை நகர குடிநீர் திட்டத்திற்கு பயனளிக்கும் வகையில் உருவாக்கப்படும்.

சோமசில நீர்த்தேக்கத்திற்கு கீழ் கண்டல் ஏரி நீர்த்தேக்கம் அமைக்கப்பட்டு அதிலிருந்து தமிழ்நாடு ஆந்திரப் பிரதேச எல்லை வரை ஒரு கால்வாய் வெட்டப்படும். ஆந்திர பிரதேச எல்லைக்குள் சென்னை நகர குடிநீர் வழங்கு திட்ட கட்டுமான பணிகளை ஆந்திர அரசு நிறைவேற்றும், அப்பணிகளுக்கான செலவுமற்றும் பராமரிப்பதற்கான சென்னை நகர குடிநீர் வழங்கு திட்டகட்டுமான பணிகளை ஆந்திர அரசு நிறைவேற்றும் அப்பணிகளுக்கான செலவு மற்றும் பராமரிப்பதற்கான ஒவ்வொரு ஆண்டிற்கும் ரூ 60 கோடி வரை ஆந்திர அரசுக்கு கொடுக்க ஒப்புக் கொண்டுள்ளது. செலவு ஆகியவை இரு மாநிலங்களும் அடையும் பயன்களின் விகிதாசாரப்படி பகிர்ந்துக் கொள்ளப் படும்.

ஒவ்வொரு வருடமும் தமிழ்நாடு அரசால் வகுக்கப் பட்ட முறைப்படி வருடத்தில் 8 மாதங்கள் குறிப்பிட்ட அளவு தண்ணீரை ஆந்திர அரசு தமிழ் நாட்டின் எல்லையில் கொடுக்கும்.

இதன் அளவு வருடத்திற்கு 15 டி. எம். சி.

[2-ம் பக்கம் பார்க்க]

சென்னை நகர ஷெரிப் சிவந்தி ஆதித்தனின் மகள் திருமண விழாவில் மணமக்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் திலகமிட்டு வாழ்த்துகிறார்

நாளை

## தியாகராயர் சிலைக்கு ப.உ.ச. மாலை அணிவிக்கிறார்

சென்னை, ஏப். 26— வெள்ளுடைவேந்தர் சர். தியாகராயரின் பிறந்த நாளான நாளை கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. காலை 9 மணிக்கு சென்னை மாநகராட்சி கட்டிட எதிரில் அமைந்துள்ள தியாகராயரின் சிலைக்கு மாலை அணிவித்து மரியாதை செலுத்துகிறார். கழகத் தோழர்கள் திரளாக வந்திருந்து அந்த வரலாற்று நாயகருக்கு மரியாதை செலுத்துமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்,

## நகராட்சி தேர்தல்: இடஒதுக்கீடு விவரம்:

2-ம் பக்கம்

★ சபை உறுப்பினரை அச்சுறுத்தும் நடவடிக்கை
★ சபையின் உரிமை மீறல் - அவமதிப்பு

## புரட்சித்தலைவர் மீது வழக்கு தொடர்ந்த

# ஆற்காடுவீராசாமி மீது நடவடிக்கை

## உரிமைப் பிரச்சினையில் சபாநாயகர் ராசாராம் தீர்ப்பு

**சென்னை, ஏப் 26- முதல்வர் புரட்சித்தலைவர் மீது ஐகோர்ட்டில் வழக்கு தொடர்ந்ததன் மூலம் தி. மு. க. எம். எல். சி. ஆற்காடு வீராசாமி சட்டசபையின் உரிமையை மீறினார் என்றும் சபையைஅது அவமதிப்பதாக உள்ளதாகவும் சபாநாயகர் ராசாராம் உரிமை பிரச்சினை ஒன்றில் தீர்ப்பளித்தார்.**

இது குறித்து மேற்கொண்டு நடவடிக்கைக்காக இந்த செய்தியை மேலவைத் தலைவருக்கு அனுப்பி வைக்கப்படுவதாகவும் சபாநாயகர் ராசாராம் கூறினார்.

சட்டசபையில் அழக உறுப்பினர்கள் வேடசந்தூர் பாலசுப்பிரமணியம், ஜே.சி.டி. பிரபாகரன். ஐயேட்சை உறுப்பினர் டாக்டர் சவுரிராஜன் ஆகியோர் ஆற்காடு வீராசாமி மீதுகொடுத்த உரிமை பிரச்சினை குறித்து சபாநாயகர் ராசாராம் தீர்ப்பளித்தார்.

சபாநாயகர் ராசாராம் கூறியதாவது:-

உறுப்பினர்கள் வி. பி. பாலசுப்பிரமணியம் ஜே.சி.டி. பிரபாகரன் மற்றும் டாக்டர் கே. சவுரிராஜன் ஆகியோர் 25-3-83 அன்று மேலவை உறுப்பினர் ஆற்காடு வீராசாமி மீது அவை உரிமை மீறல் குறித்த ஒரு பிரச்சினைக்கான முன்னறிவிப்பு கொடுத்தார்கள்.

இது பற்றி பேரவையில் 5-4-83 அன்று வி. பி. பாலசுப்பிரமணியமும், டாக்டர் சவுரிராஜனும் எவ்வாறு பேரவையின் உரிமையை வீராசாமி மீறியிருக்கிறார்; எவ்வாறு இப்பேரவையை அவமதித்திருக்கிறார் என்பதற்கான காரணங்களை காட்டியிருக்கிறார்கள்; இதன் மீது என் தீர்ப்பு பின்னர் வழங்கப்படும் என்று தெரிவித்திருந்தேன். இது பற்றி மேலும் ஆய்ந்த போது வீராசாமி இவ்அவையில் பேசிய உறுப்பினர் மீது அவ்வாறு அவர் பேசியது தவறு. அதற்காக அவர் வகிக்கும் பதவியிலிருந்து விலக்கப்பட வேண்டும் என்று உயர்நீதி மன்றத்தில் கொடுத்துள்ள மனு இப்பேரவையில் ஒரு உறுப்பினர் பேசிய பேச்சின் மீது அவரை அச்சுறுத்தும் வகையில் எடுக்கப்பட்ட நடவடிக்கை என்பதில் எந்த விதமான கருத்து வேறுபாடும் இருக்க இயலாது. அவ்வாறு எடுக்கப்படும் நடவடிக்கை மேலெழுந்த வாரியாக பார்க்கும் போது கூட பேரவை உரிமைகளை மீறியதாகவும் பேரவையினை அவமதிப்பதாகவும் அமையும்.

ஆற்காடு வீராசாமி எடுத்த நடவடிக்கை மேலவையில் அவரது செய்கையாக இல்லாவிட்டாலும்கூட அவர் மேலவை உறுப்பினர் என்று இருப்பதால் இரு அவைகளுக்கும் இடையே உள்ள நல் உறவுகளை கருத்தில் கொண்டு இப்பிரச்னை மீது அவ்வவையே அந்த உறுப்பினர் அந்தஅவைக்கு இழைத்த உரிமை மீறல் செயலாக எடுத்துக் கொண்டு மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கும் படி அந்த சபைக்கு செய்து அனுப்பி வைக்கலாம். அல்லது மேலவை இப்பொருள் மேலவை சம்பந்தப்பட்டது இல்லை. பேரவையே மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கலாம். என்ற கருத்தினை பேரவைக்கு தெரிவிக்கலாம்.

எனவே இந்த அவையின் அனுமதியுடன் இப்பிரச்சினை குறித்த செய்தியை மேலவைத்தலைவருக்கு அனுப்பி மேலவையின் கருத்தினைப் பெற்று இப்பேரவைக்கு திரும்ப செய்தி வந்தபின் அதற்கு ஏற்ப நடவடிக்கை எடுக்கலாம். ஆகவே இப்பிரச்சினை குறித்து நான் மேலவைத் தலைவருக்கு மேற்கூறியவாறு அனுப்பி வைக்கிறேன் என்பதை பேரவைக்கு தெரிவித்துக் கொள்கிறேன்,

இவ்வாறு சபாநாயகர் ராஜாராம கூறினார்.

## வெள்ளுடை வேந்தர் சர். பி. தியாகராயர் பிறந்த நாள்: ஏப்ரல் 27

உடை வெள்ளை
உள்ளமும் வெள்ளை
பொதுத் தொண்டே
பொழுதுபோக்கு
பதவி வேண்டாத
பெருநோக்கு
தன்னலங்கருதா உள்ளங்
கொண்டார்
தென்னிந்திய நல உரிமைச்
சங்கம் கண்டார்
இருபத் தேழாம் நாள்
பிறந்தார்
—தமிழர் வாழ்வில்
திருப்பங்கள் பல புரிந்தார்
அவர் பெயர்தனை வாழ்த்துவமே!

வருவாய்த்துறை ஆணையாளர் தகவல்

# ஜெனரேட்டர்கள் வாங்க நகரசபைகட்கு அரசு பண உதவி

கடலூர், ஏப். 26- மின்சார பற்றாக் குறையை சமாளிப்பதற்காக, ஜெனரேட்டர் இயந்திரம் வாங்கும்படி நகரசபைகளுக்கு உத்திரவிடப்பட்டுள்ளது என்று மாநில வருவாய்த்துறை ஆணையாளர் பத்மநாபன கூறினார்.

கடலூர்வந்ததமிழ்நாடு வருவாய்த்துறை ஆணையாளர் ஏ. பத்மநாபன் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:-

வறட்சி காரணமாக குடிதண்ணீர் கிடைக்காத இடங்களுக்கு உதாரணமாக லாரிகள், மாட்டுவண்டிகள், டிராக்டர்கள் அல்லது "ஸ்டீல் டாங்கர்" அமைத்து லாரிகள் மூலம் குடிதண்ணீர் வழங்க வேண்டும் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மின்சாரப் பற்றாக் குறையை சமாளிப்பதற்காக, கடலூர் உட்பட தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள எல்லா நகர சபைகளுக்கும் உடனடியாக டீசல் ஜெனரேட்டர் வாங்க உத்திர விடப்பட்டுள்ளது. பணம் இல்லாத நகரசபைகளுக்கு அரசு பண உதவி அளிக்கும்.

கடலூர் நகரசபைபகுதியில ஏற்கனவே 20 ஆழ்துளைக் கிணறுகள் உள்ளன. அங்கு கூடுதலாக 43 ஆழ்துளைக் கிணறுகள் அமைக்க அரசு அனுமதி வழங்கி உள்ளது.

தென்னாற்காடு மாவட்டத்திற்கு கிணறுகளை ஆழப்படுத்துதல் ஊரணி ஏரிகள் வெட்டுதல் போன்றவைகளுக்கு 1 கோடியே 52 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இது தவிர தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம் மூலம் ரூ. 1 லட்சத்து 35 ஆயிரம் செலவில் 2,312 ஆழ்துளை கிணறுகள் தோண்டும் வேலை நடந்து வருகிறது.

அவற்றில் 1040 முடிந்து விட்டன. அதில் 830 ஆழ்துளை கிணறுகளில் கைபம்புகள் போடப் பட்டுள்ளன. கைப்பம்புகளை தென்னாற்காடு மாவட்டத்திற்கு வழங்க நடவடிக்கை எடுக்கப் பட்டு வருகிறது.

தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள 840 கிராமங்களில் சாகுபடி பாதிக்கப்பட்டுள்ளன. அந்த கிராமங்களில் நிலவரி ரூ. 1 கோடியே 72 லட்சம் தள்ளுபடி செய்யப்படும்.

இவ்வாறு அதிகாரி பத்மநாபன கூறினார்.

பேட்டியின் போது மாவட்ட கலெக்டர் காரியால், மாவட்ட வருவாய்த்துறை அதிகாரி மாரிமுத்து, உதவி கலெக்டர் மச்சேந்திரன் ஆகியோர் உடன் இருந்தார்கள்.

# மொழி போராட்ட வீரர்களுக்கு உதவித்தொகை: அரசு அறிவிப்பு

சென்னை, ஏப். 26— மொழிப்போர் தியாகிகளுக்கு நிதியுதவி மற்றும் மானியம் வழங்குவதற்கான சட்டமுன்வடிவை சட்டசபையில் முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் நாவலர் கொண்டு வந்தார். அந்த மசோதாவை எதிர்க்கட்சி உறுப்பினர்கள் அனைவரும் வரவேற்றனர். விவாதங்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் சார்பில் அவை முன்னவர் டாக்டர் நாவலர் பதிலளித்தார்.

அவர் கூறியதாவது:—

தமிழ் மொழிக்கு ஆக்கம் தந்தவர்களுக்கு ஓய்வூதியம் வழங்கும் சட்ட முன்வடிவை எல்லா உறுப்பினரும் ஆதரித்ததற்காக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழை வளர்ப்பதற்காக தமிழ் வளர்ச்சிக் கழகமும், தமிழ்ப் பண்பாட்டை வளர்க்க தமிழ்ப் பண்பாட்டுக் கழகமும் உள்ளன. தமிழ்ப் பண்பாட்டை வளர்க்க தமிழை வளர்க்க, பாடுபட்டவர்களுக்கு உதவித் தொகை அல்லது மானியம் அல்லது இரண்டும் வழங்க இந்த சட்ட முன்வடிவு வகை செய்கிறது.

தமிழ் வளர்த்த புலவர்கள் ஆசிரியர்கள் எழுத்தாளர்கள் ஆகியோரை ஊக்கப்படுத்துவது அரசின் நோக்கம் மொழியைக் காப்பாற்ற சிறைத் தண்டனை பெற்றவர்கள் இன்னுயிர் ஈந்தவர்களின் குடும்பத்தினர் ஆகியோருக்கு மாதம் ரூ. 150 உதவித் தொகை வழங்கப்படும். ரூ. 5 ஆயிரத்திற்கு மேற்படாக வகையில் மானியம் வழங்கவும் இதில் வகை செய்யப் பட்டுள்ளது.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினை:

## கவர்னர்-முதல்வருடன் மத்திய அதிகாரி ஆலோசனை

சென்னை, ஏப். 26— இலங்கைக்கு செல்லும் மத்திய வெளி விவகாரத் துறை அமைச்சர் பி.வி. நரசிம்மராவுடன் செல்லும் மத்திய வெளிவிவகாரத்துறை செயலாளர், பாஜ்பாய் தமிழக கவர்னர் குரானா, முதல்வர் புரட்சித் தலைவர், தலைமைச் செயலாளர் கே. சொக்கலிங்கம் ஆகியோரைச் சந்தித்துப் பேசினார்.

## அண்ணாவில் விளம்பரம் செய்து பயன் பெறுங்கள்

கண்ணகி கோவில்

## கேரள அரசிற்கு தமிழக அரசு கோரிக்கை

சென்னை, ஏப். 26— சட்டசபையில் இன்று நிதியமைச்சர் நாவலர் கூறியதாவது:-

தமிழ்நாடு கேரள எல்லையிலுள்ள கண்ணகி கோவில் திருவிழாவிற்கு செல்லும் தமிழக மக்களுக்கு பாதுகாப்பு தேவை என்றும் அதற்கான ஏற்பாடுகள் செய்யுமாறும், தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் கேரள முதல்வருக்கு தந்தி அனுப்பியிருந்தார். இதே போல தமிழக அரசு தலைமைச் செயலாளர் கேரள அரசின தலைமை செயலாளருக்கு கடிதம் அனுப்பியிருந்தார்.

இதற்கு கேரள முதல்வரிடமிருந்து பதில் தந்தி வந்துள்ளது. சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு பாதுகாப்பு ஏற்பாடுகளைக் கேரள அரசு செய்யும் என்று அதில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

கண்ணகி கோவில் காட்டுப்பகுதியில் இருப்பதால் அங்கு சென்று விட்டு உடனே திரும்ப முடியாது அங்குதான் தங்க நேரிடும் என்றும் பக்தர்கள் பக்தி பாடல பாட மைக் தேவை என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

## நகராட்சித் தலைவர் தேர்தல்: இட ஒதுக்கீடு விவரம்

சென்னை, ஏப் 26- நகராட்சித் தலைவர் பதவி இட ஒதுக்கீட்டில் பெண்கள் மற்றும் ஆதிதிராவிடர்களுக்கு ஒதுக்கப்பட்ட நகராட்சிகள் விவரம் சட்டசபையில் தெரிவிக்கப் பட்டது.

சட்டசபையில் மாவட்ட நகராட்சிகள் திருத்த சட்ட முன்வடிவின் மீது நடைபெற்ற விவாதத்திற்குப் பதிலளித்து அமைச்சர் குழந்தைவேலு கூறியதாவது:—

கடந்த மார்ச் மாதம் 13 ந் தேதி நடை பெற்ற அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் நகராட்சிகளில் இட ஒதுக்கீடு செய்வது பற்றி எந்த கட்சியும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை.

இந்த அரசின் கொள்கை ஆதிதிராவிடர் பழங்குடி. மலைவாழ் மக்களுக்கும் பெண்களுக்கும் இட ஒதுக்கீடு தேவை என்பது தான்.

பஞ்சாயத்து தேர்தலில் இட ஒதுக்கீடு செய்யப்பட்டதை எதிர்த்து நீதி மன்றத்திற்குப் போய் தடை வாங்கியதால் தேர்தல் நிறுத்தப்பட்டது. இப்போது அது உச்ச நீதி மன்றத்தில் இருக்கிறது. அந்த சந்தேகம் இப்போதும் வந்திருக்கிறது.

## முதல்வர் கருத்து

முதல்வர் புரட்சித் தலைவர் கூறுகையில் புதியமுறையை கொண்டு வந்து இட ஒதுக்கீடு செய்வதற்குமாறாகயாராவது வழக்கு மன்றத்திற்கு போனால் பழைய சட்டப்படி தேர்தல் நடத்த வேண்டும் என்றார். யாராவது பழைய சட்டத்திற்கும் தடை வாங்கினால் என்னாவது என்று கேட்கலாம்.

அப்படி வந்தால் அதற்காக சட்டமன்றத்தை தனியாக கூட்டி முடிவு எடுக்க இருக்கிறோம், இந்த அரசு தேர்தலைக் கண்டுபயப்படுகிறது என்ற எண்ணம் ஏற்பட தேவையில்லை.

தமிழகத்தில் 98 நகராட்சிகள் இருக்கின்றன. அவற்றில் சேலம், சூரமங்கலம், திருச்சி, பொன்மலை, திருநெல்வேலி, மேலப்பாளையம், பாளையங்கோட்டை ஆகிய நகராட்சிகள் தவிர 91 நகராட்சிகளுக்கு தேர்தல் நடத்தயிருக்கிறோம்.

இதில் 16 நகராட்சிகள் ஆதிதிராவிட, பழங்குடி, மலைவாழ் மக்களுக்கும் 13 நகராட்சிகள் பெண்களுக்கும் ஒதுக்கீடு செய்யப்பட இருக்கிறது

இந்த ஒதுக்கீடுகள மாநில அளவில் தான் எடுத்துக் கொள்ளப்படும் வார்டுகள், நகராட்சிகள் அளவில் எடுத்துக் கொள்ளப்படும்.

நகராட்சிகள் தேர்தலுக்கான அறிவிப்புகள் வருமாறு:

நகர்மன்ற தலைவர் பதவி தனி ஒதுக்கீடு பற்றி மே மாதம் இறுதியில் வெளியிடப் படும்.

81ம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பை வைத்து மேயாத இறுதியில வார்டுகள் பிரிக்கப் படும்.

வார்டுகளின் இட ஒதுக்கீடு ஜூன் மாதத்தில் வெளியிடப்படும்.

தேர்தல் பற்றிய அறிக்கை ஜூலை முதல் வாரம் வெளியிடப்படும், தேர்தல் ஜூலை கடைசி வாரத்திலிருந்து ஆகஸ்டு முதல்வாரத்திற்குள் நடத்தப்பட வேண்டுமென்பது இந்த அரசின் எண்ணம்.

தமிழகத்திலுள்ள 2452 வார்டுகளில் ஆதிதிராவிட பழங்குடி மலைவாழ மக்களுக்கு 441 வார்டும் பெண்களுக்கு 367 வார்டும் ஒதுக்கீட்டில் வரும்.

81 ஜனத் தொகை படி வார்டுகள் அதிகரிக்கும சூழ்நிலை உண்டு. அப்போது ஒதுக்கீட்டின் எண்ணிக்கையும் அதிகரிக்கும்.

ஆதிதிராவிட பழங்குடி மலைவாழ் மக்களுக்கான நகராட்சிகள் வருமாறு:

நெல்லிக்குப்பம் ராணிப்பேட்டை உதகை குன்னூர் அரக்கோணம் சீர்காழி சங்கரன்கோவில் புளியங்குடி (சேலம்) ஆத்தூர், ஆம்பூர், பல்லாவரம், தாராபுரம், திருவள்ளூர், துறையூர், கடையநல்லூர், தாம்பரம் பெண்களுக்கான நகராட்சிகள் இட ஒதுக்கீடு வருமாறு:

தென்காசி ஸ்ரீ வில்லிப்புத்தூர் வாணியம்பாடி நாகப்பட்டினம குளித்துறை வாலாஜாபேட்டை திருவாரூர் நாகர்கோவில் செங்கோட்டை ஆரணி பரமக்குடி மயிலாடுதுறை தேவகோட்டை ஆகிய இடங்களாகும்

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார் பின்னர் மசோதா நிறைவேறியது.

## வாசன் விமலா கலைக்குழு நிகழ்ச்சிகள்

ஏப் 26— வட சென்னை கிரஸ் கார்டன் 27-ம் வது வட்டம் மே.1 முதல் 10 ந் தேதி வரை சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் இ. மதுசூதனன் ஏற்பாடு செய்யும் நிகழ்ச்சிகள்.

## 384 பேர்களுக்கு இலவச வேட்டி - சேலை

கடலூர், ஏப். 26— ஏழை விவசாயிகளுக்கு தமிழக அரசு இலவசமாக வேட்டி - சேலை வழங்கியது. பரங்கிப்பேட்டை பஞ்சாயத்து யூனியன் சார்பாக பெரியப்பட்டு கிராமத்திலும், சூரியாமங்கலம் கிராமத்திலும் ஆண்களுக்கு 190 வேட்டியும், பெண்களுக்கு 194 சேலைகளும் இலவசமாக வழங்கப்பட்டது.

---

தலைமைக்கழக அறிக்கை எண்: 44-83

## நகரிய கழக அமைப்புகள்

கழக செயல்முறைகளை கருத்தில் கொண்டு அனைத்து நகரிய கழக அமைப்புகளும் நகர கழக அமைப்புகளாக கருதப்படும். ஒன்றிய கழகங்களின் கட்டுப்பாட்டிற்குள் நகரியங்கள் வராது.

நகரங்களைப் போல் நகரியங்கள் தனித்து இயங்கும்.

ஒவ்வொரு நகரியத்திலும் உறுப்பினர்களை முறைப்படி வார்டு வாரியாக சேர்த்து தேர்தல நடத்தி அதனைத் தலைமைக் கழகத்திற்கு தெரிவித்தால் நகரிய செயலாளர் தேர்தல் நடத்திட தலைமைக் கழகம் அறிவிக்கும் ஏற்கனவே அவ்வாறு முறைப்படி தேர்தல் நடை பெற்று நகரிய செயலாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தால், அதனை தலைமைக் கழகத்திற்கு தெரிவித்தால்-தலைமைக் கழகம் நகர செயலாளராக ஏற்றுக் கொள்வது பற்றிப் பரிசீலிக்கும்.

அவ்வாறு தலைமைக் கழகம் நகரிய செயலாளர்களை நகரச் செயலாளராக ஏற்றுக் கொண்டு விட்டால் அவர் அந்தப் பதவியின் காரணமாக பொதுக்குழு உறுப்பினராகக் கருதப்படுவார்.

**ப. உ. சண்முகம்**

சென்னை-14 பொதுச் செயலாளர்
26-4-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

தலைமைக் கழக அறிக்கை எண் 43/83

## கிழக்குத் தஞ்சை மாவட்டம் மன்னார்குடி நகர கழகத் தோழர்களுக்கு

மன்னார்குடி நகர கழகத் தேர்தல் முறையாக நடக்கவில்லை என்று கூறி ஏற்கனவே அந்த அமைப்பு கலைக்கப்பட்டது.

எனவே நகர செயலாளர் என்று யாரும் அங்கே இல்லை.

நகரகழகத் தேர்தல் விரைவில் நடத்தப்பட உள்ளது. அதுவரை மாவட்டச் செயலாளரே மன்னார்குடி நகர செயலாளர் பொறுப்பில் தற்காலிகமாக இருப்பார்.

**ப. உ. சண்முகம்**

சென்னை—14 பொதுச் செயலாளர்
26-4-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

## பேச்சாளர் பட்டியலில் இணைப்பு

திருப்பூர் ஈசாக்
(கழக பேச்சாளர்)
15, எம். எஸ். ஆர். லேன்
திருப்பூர்—4.

-ஜெயலலிதா

சென்னை—14 கொள்கை பரப்புச்செயலாளர்
26-4-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

## பேரவை நடத்தும் மே தினக் கூட்டங்கள் பட்டியலில் இணைப்பும் மாற்றமும்

திருச்சி
மாண்புமிகு எஸ். டி எஸ்.
திரு முசிறிப்புத்தன்
சென்னை
மாண்புமிகு சு. முத்துசாமி
திரு கே. ராஜேந்திரன்
திரு வேலூர் நாராயணன்
திரு. டி கே கபாலி
காஞ்சிபுரம்
திரு. சமரசம்
திரு நாஞ்சில் வின்சென்ட்
ஈரோடு
மாண்புமிகு ப. குழந்தைவேலு
திரு ஆர் சண்முகம்

-ஜெயலலிதா

சென்னை-14 கொள்கை பரப்புச் செயலாளர்
26-4-83 அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

---

# புரட்சித்தலைவர் அறிக்கை...

(1-ம் பக்க தொடர்ச்சி)

ஆகும்.

இத் திட்டத்தின் படி கிடைக்கும் நீர் சென்னை நகர குடிநீர் தேவைக்கு மட்டுமே பயன்படுத்தப்படும். இத் திட்டத்தை 3 முதல் 6 ஆண்டுகளில் முடிக்க முடியும். இத் திட்டத்தை முடிக்க தமிழ்நாடு அரசு முதல் 3 ஆண்டுகளுக்கு ஒவ்வொரு ஆண்டிறகும் ரூ 60 கோடி வரை ஆந்திர அரசுக்கு கொடுக்க ஒப்புக் கொண்டுள்ளது.

## காலவரம்பற்ற ஒப்பந்தம்

இந்த ஒப்பந்தம் கால வரம் பற்றது. நிரந்தர மானது.

ஆந்திர மாநிலத்தில் ஸ்ரீசைலம் நீர்த்தேக்கத்திலிருந்து தமிழகத்தின் எல்லை வரை தண்ணீர் கொண்டு வர 354 கிலோ மீட்டர் நீளத்திற்கு வாய்க்கால்கள் அமைக்கப்பட வேண்டியுள்ளது.

தமிழ்நாடு எல்லையிலிருந்து பூண்டி நீர்த்தேக்கம வரை 25 கி மீ. நீளத்தில் ஒரு கால்வாயும், பூண்டியிலிருந்து செயபாரயபாக்கம் ஏரி வரை 25 கி மீ. நீளத்திற்கு மற்றொரு காலவாயும் வெட்டப்பட வேண்டியுள்ளது.

கிருஷ்ணா நீரை சேமித்து வைக்க பூண்டி, புழல், செம்பரம் பாக்கம் ஆகியவை 8 அடி உயர்த்தப்படும்.

அத்துடன் சென்னை நகருக்கு குழாய்கள் அமைப்பதும் மற்றும் வடிகால்கள் அமைக்கும் பணிகளுக்காக சேர்த்து மொத்தம் சுமார் ரூ. 436 கோடி செலவு ஆகும.

ஆந்திர பிரதேச எல்லைக்குள் செய்யப்பட வேண்டிய வேலைகளுக்கு தமிழ்நாட்டின் பங்கு சுமார் ரூ. 200 கோடி என்று ஆய்வேடாது மதிப்பிடப்பட்டுள்ளது.

சென்னை நகரில் இன்னும் 20 ஆண்டுகளில வளரும் மக்கள் தொகையின் குடிநீர் தேவை 1294 மில்லியன் லிட்டர் என்சா தேவைபடும். தற்போது கிடைப்பது 299 மில்லியன லிட்டர் ஆகும. கூடுதலாக தேவைபடுவது [illegible] மில்லியன் லிட்டர்,

ஏற்கெனவே தொடங்கப் பட்டு கைவிடப்பட்ட வீராணம் திட்டம் நாளொன்றுக்கு 180 மில்லியன் லிட்டரையே அதுவும். நீர் ஏற்றத்தின் மூலமாக தான் கொடுத்திருக்கும். எனவே சென்னை நகருக்கு கிருஷ்ணா நதி நீர் திட்டமே சிறநதது.

இத்திட்டத்தின் மூலம் 2 மாநிலங்களிலும் பெருமளவு வேலைவாய்ப்பு ஏற்படும்.

இந்தியாவிலேயே இரு மாநிலங்களுக்கிடையே பரஸ்பர ஒத்துழைப்பின் மூலம் ஒரே நாளில பேசி உருவாக்கப்பட்டு. இரு மாநில மக்களுக்கும் ஒரே நேரத்தில் சம அளவில் பயன்பெறும் திட்டம் இது ஒன்றுதான் என்பதில் சந்தேகம் இல்லை.

இந்த ஒப்பந்தம் ஏற்பட காரணமாக இருந்த பிரதமர் அவர்களுக்குத் தமிழகம்- குறிப்பாக சென்னை வாழ் மக்களும் தமிழக அரசும் பெரிதும் நன்றி கூறிக்கொள்கிறோம்.

மராட்டிய, கர்நாடக, ஆந்திர மாநில அரசுகளுக்கு நமது நன்றி. அவர்கள் சம்மதம் தராதிருப்பின் இந்த ஒப்பந்தம் ஏற்பட்டிருக்குமா என்பது சந்தேகமே. இந்த பேச்சு வார்த்தையில தமிழக அரசு தரப்பில கலந்து கொண்ட மின்சாரத் துறை அமைச்சர் எஸ். ராமச்சந்திரன், தொழிலாளர் நல அமைச்சர் எஸ். ராகவானந்தம், தலைமைச் செயலாளர் (பொறுப்பு) சொக்கலிங்கம பொதுப்பணித்துறை செயலாளர் மாதவசாமி சட்டத் துறைச்செயலாளர் வடிவேலு, தலைமைப் பொறியாளர் மோகன கிருஷ்ணன், எனது செயலாளர் எம். பரமசிவம முதலானவர்களுக்கும ஆந்திர அரசு தரப்பில் கலந்து கொண்ட அமைச்சர்களுக்கும், அதிகாரிகளுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்,

பேச்சுவார்த்தையின் போது அவ்வப்போது ஏற்படும சிறு பிரச்சினைகளை பரந்த மனப்பான்மையுடன் தீர்த்து ஒப்பந்தம் ஏற்பட வாய்ப்பளித்து எனதும எனது அருமை உடன் பிறப்பான ஆந்திர முதல்வர் என். டி. ராமாராவுக்கு என் சார்பிலும், தமிழக அரசின் சார்பிலும், தமிழக மக்களின் சார்பிலும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒரு வேளை இதைவிட சிறப்பாக வேறு யாராவது இந்த ஒப்பந்தத்தை செய்து முடித்திருக்கலாம். எனினும என்னை வாழ வைக்கும் தமிழகத்தின தாய்மார்களின், பெரியோர்களின, சென்னை வாழ் மக்களின் நீண்ட கால தேவையான குடிநீர் பிரச்னைக்கு அவசர, அவசிய நோக்கோடு என்னால் முடிந்த அளவு எனது கடமையை அண்ணா வழியல் என்னை இந்நிலையில் வைத்துள்ள தமிழகத்திற்கு செய்து முடித்துள்ளேன்.

இந்த திட்டத்தை நிறைவேற்றுவதற்கு என்னை ஆளாக்கிய அமரர் பேரறிஞர் அண்ணா அவர்களுக்கும் தமிழக மக்களுக்கும் மீண்டும ஒருமுறை எனது வணக்கத்தை காணிக்கையாக்குகிறேன. வாழ்க அண்ணா நாமம்.

இவ்வாறு அந்த அறிக்கையில் புரட்சித்தலைவர் கூறியுள்ளார். அந்த அறிக்கையை சபையில் நாவலர் வாசித்தார்.

## வீராணம்: கருணாநிதிக்கு நாவலர் பதில்

சென்னைக்கு கிருஷ்ணா நதி நீர் கொண்டு வருவதற்கான ஒப்பந்தங்கள் குறித்த அறிக்கையில் வீராணம் திட்டம் கைவிடப்பட்டது ஏன்? என்ற விவரமும் அடங்கியுள்ளது.

வீராணம் திட்டத்தை அப்போதிருந்த தி.மு.க அரசு நன்றாக பரிசீலிக்காமல் செயல்படுத்தியது குறித்து நிபுணர்கள் குழு அதிருப்தி தெரிவித்து இருந்ததை அறிக்கையில் முதல்வர் புரட்சித்தலைவர் சுற்றிக் காட்டியிருக்கிறார்.

வீராணம் திட்டத்திற்காக குழாய்கள் பலம் வாய்ந்தவைகளாக இல்லை.

தண்ணீர் அழுத்தத்தை [illegible] பரிசீலிக்காமல் குழாய்கள் வாங்கப்பட்டு பின்னர் அந்தக் குழாய்கள் பயனற்று போய்விட்டன. அந்த திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்புதகுதியற்ற ஒரு நிறுவனத்திடம் ஒப்படைக்கப்பட்டு திட்டம் முடிவடைவதற்கு முன்பே அந்த நிறுவனத்திற்கு ரூ, 13 கோடி ரூபாய் அரசு பணம வழங்கப் பட்டுள்ளது. இது முன்பு எப்போதும நடைபெறாத நிகழ்ச்சி என்று நிபுணர்குழு சுட்டிக் காட்டியிருந்தல அறிக்கையில் குறிப்பிடப்பட்டு இருந்தது.

## துரைமுருகன் மிரட்டல்

அறிக்கையை நிதி அமைச்சர் நாவலர் படித்துக் கொண்டிருந்த போது கருணாநிதி குறுக்கிட்டு பேசினார்.

சபையிலிருந்து தனது ஆட்சிக்காரர்களுடன் அவர் வெளிநடப்பு செய்தார். அப்போது துரைமுருகன் சபையை விட்டு வெளியே போகும் போது கூச்சலிட்டுக் கொண்டு வெளியேறினார்.

கழக உறுப்பினர்களை பார்த்து நாக்கை கடித்து கொண்டு கையை ஏற்றி ஒருவிரலைக்காட்டி மிரட்டுவது போலவும், கழக உறுப்பினர் களைபார்த்து அவர் கூச்சலிட்டபடியே வெளியே சென்றார்.

பல்வேறுமுறைகேடுகள் காரணமாக வீராணம் திட்டம் தோல்வி கண்டது. என்று அறிக்கையில் குறிப்பிடப் பட்டிருந்தது.

வெளிநடப்பிற்கு முன்னதாக நிதியமைச்சர் நாவலருக்கும கருணாநிதிக்கும வாக்குவாதம் ஏற்பட்டது.

# சத்துணவுத் திட்டம்: மத்திய அரசு நிதி உதவ வேண்டும்

## அமைச்சர் திருநாவுக்கரசு வேண்டுகோள்

கோவை, ஏப். 26- முதல்வர் புரட்சித் தலைவர் நிறைவேற்றி வரும் இலவச சத்துணவுத்திட்டத்திற்கு மத்திய அரசு நிதி உதவி அளிக்க வேண்டும் என்று தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு கேட்டுக் கொண்டார்.

கோவை மாவட்டம் மதுக்கரை, சூலூர், பேரூர் ஆகிய ஊராட்சி ஒன்றியங்களில் நடைபெற்ற ஏழை நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களுக்கு இலவச வேட்டி சேலை கொடுக்கும் விழாவில் கலந்து கொண்டு தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு 8410 பேர்களுக்கு வேட்டி சேலைகள் வழங்கினார்.

விழாவிற்கு மாவட்ட ஆட்சித் தலைவர் பாஸ்கரதாஸ் தலைமை வகித்தார். தொகுதிசட்டமன்ற உறுப்பினர் கோவைத் தம்பி முன்னுரை நிகழ்த்தினார். மாவட்ட வருவாய் அலுவலர் அபுல்காசன் மற்றும் கோட்ட வளர்ச்சி அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது:

தமிழ்நாடு முழுவதும் இன்று வேட்டி சேலை வழங்கும் விழா நடைபெற்றுவருகிறது. வறட்சி கொண்டுள்ள இந்த நேரத்தில் உடுத்தும் துணியை உலர்த்தி கட்ட மாற்று துணியில்லாத ஏழை விவசாயத் தொழிலாளர்களின் கஷ்டத்தை மனதில் கொண்டு புரட்சித்தலைவர் ஏழை விவசாயிகளுக்கு ஒரு வேட்டியும் சேலையும் கொடுப்பதற்கு உத்தரவிட்டுள்ளார். இதன் மூலம் ஏழை விவசாயிகள் இவற்றைப் பெறுவதோடு 35 லட்சம் ஏழை நெசவாளத் தொழிலாளர்களின் குடும்பங்களும் வாழ்வு பெறுகிறது. இம்மாவட்டத்தில் 75,000 பேர் இத்திட்டத்தினால் பயன் பெறுகிறார்கள்.

### சமூகப் பணி

சுதந்திரம் அடைந்து 35 ஆண்டுகள் ஆகியும் நாம் இன்னும் சமூகப் பணிகளுக்காக செயலாற்ற வேண்டியுள்ளதே என்று ஒரு பக்கம் கவலை கொண்டாலும், மற்றொரு பக்கம் இதுமிகவும் அத்தியாவசியமாகிறது. மேலைநாடுகளில் அரசின் பணத்தை வளர்ச்சிப் பணிகளுக்காக செலவிடுகின்றனர். நம் நாட்டில் சமூகப் பணிகளையும் செய்து கொண்டு வளர்ச்சிப் பணிகளையும் மேற்கொள்ள வேண்டியுள்ளது.

### மத்திய அரசு உதவ வேண்டும்

அரசிடம் இருக்கும் வருமானத்தைக் கொண்டு 65 லட்சம் ஏழை குழந்தைகளுக்கு இலவச சத்துணவு போட்டு வருகிறோம். இதனால் ஆண்டுக்கு 130 கோடி ரூபாய் அரசுக்கு செலவாகிறது. தமிழ நாட்டைப் போலவே, மற்ற மாநில அரசுகளும் ஏழைக் குழந்தைகளுக்கு சத்துணவு அளித்தால் குழந்தைகளின் ஆரோக்கியம் நன்றாக அமையும். இதற்கு மத்திய அரசு நிதிஉதவி அளிக்கவேண்டுமென கேட்டுக்கொள்கிறேன்.

தமிழ நாட்டிலுள்ள 375 ஊராட்சி ஒன்றியங்களும் தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் எடுக்கப்பெற்று ஊராட்சிக்கு வேண்டிய வசதிகளை நிறைவேற்றி கொடுக்கப்பட்டுள்ளன. அடுத்தபடியாக நகராட்சிகளுக்கு அரசின் நிதியிலிருந்து பணம் ஒதுக்கி, தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் எடுக்கப்பட்டு வேலைகள் நடைபெற்று வருகின்றது.

இவ்வரசு அறிவித்த திட்டங்களை நிறைவேற்றியும், அறிவிக்காத பல புதுத்திட்டங்களை செயல்படுத்தியும் வருகிறது. மத்திய அரசின் புதிய கொள்கைப்படி ஜீரோ தொழிற்சாலை மாவட்டங்களில் தொழிற்சாலைகள் துவங்கப்பட வேண்டுமென அறிவித்ததால் நம் தமிழ்நாட்டில் ஒரு மாவட்டம்கூட இடம் பெறவில்லை.

ஆகவே மாவட்டங்களை அடிப்படையாக அறிவிப்பதற்கு பதிலாக பிளாக்குகளை தேர்ந்தெடுத்து தொழிற்சாலை இல்லாத பிளாக்குகளில் தொழிற்சாலை நிறுவ அனுமதியளிக்க வேண்டுமென மைய அரசைக் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

# திட்டக்கமிஷன் தலைவர் கார்த்திகேயன் பதவி நீடிப்பு

சென்னை, ஏப். 26— தமிழ்நாடு திட்டக் கமிஷன் தலைவராக பணியாற்றும் வி. கார்த்திகேயன் பதவிக் காலம் இம்மாதம் 30-ம் தேதியுடன் முடிவடைகிறது.

கார்த்திகேயனின் பதவிக் காலம் மேலும் ஒரு ஆண்டுக்கு ஒப்பந்த அடிப்படையில் நீடிக்கப்பட்டுள்ளது.

திட்டங்கள் தீட்டுவதில் அவருக்குள்ள அனுபவம், மற்றும் நிர்வாகத்திறமை ஆகியவற்றின் அடிப்படையில் இந்தப் பதவி நீடிப்பு அளிக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

## அமைச்சர் எஸ். டி. எஸ். தகவல்

# பாசன நீரை குடிநீராக பயன் படுத்த திட்டம்

செங்கல்பட்டு, ஏப். 26 பாசனத்துக்குப் பயன்படுத்தப்படும் தண்ணீரை குடிநீராகப் பயன் படுத்தலாமா என்பது குறித்து அரசு தீவிரமாக யோசித்து வருகிறது என்று அமைச்சர் எஸ். டி. எஸ் கூறினார்.

செங்கல்பட்டு மாவட்டத்தில் நிலமற்ற ஏழை விவசாயத் தொழிலாளர்களுக்கு இலவச வேட்டி சேலைகளை வழங்கி அமைச்சர் எஸ். டி. எஸ். பேசுகையில் கூறியதாவது:-

விவசாயம் செய்கிற நீரை குடிப்பதற்கு பயன்படுத்த வாங்கிடலாமா என அரசு தீவிரமாக ஆலோசித்து வருகிறது ½ ஏக்கர், ½ ஏக்கர் பயிரிடும் விவசாயிக்கு அந்த விவசாயி பெறும் லாபத் தொகையான ரூ.4 ஆயிரம் அல்லது 5 ஆயிரத்தை நஷ்ட ஈடாகக் கொடுத்து பாசன நீரை குடிநீர் வினியோகத்திற்குப் பயன்படுத்தலாமா என அரசு யோசித்து வருகிறது. குடிநீர்ப் பிரச்சினையைத் தீர்க்க போர்க்கால நடவடிக்கைகளை செய்து வருகிறோம்.

விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை தர பல கோடி ரூபாய்களை அரசு ஒதுக்கி உள்ளது. வேலைவாய்ப்புகளை உருவாக்கிட ரூ. 56.75 கோடி அரசு ஒதுக்கியுள்ளது. இலவச வேட்டி சேலைகள் பறந்த தகுதி பெற்றவர் யாரேனும் விடுபட்டிருந்தால் அதுபற்றி கூறி புகார்களைப் பெறலாம்.

அரிசி விலை ஏறவில்லை எவ்வளவு பஞ்சம் வந்தாலும், சங்கடங்கள் வந்தாலும் பட்டினியால் யாரும் இறக்கும் நிலைக்கு விடமாட்டோம். அரசுக்கும், அதிகாரிகளுக்கும் பூரண ஒத்துழைப்பைத் தந்து மக்கள் ஆதரவாக இருக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி. எஸ். பேசினார்.

# 'ரோகிணி' செயற்கைகோள் நன்றாக இயங்குகிறது

பெங்களூர், ஏப். 26— இந்தியா கடந்த வாரம் விண்வெளியில் ஏவிய ரோகிணி டி-2 செயற்கைகோள் நன்றாக இயங்கிக் கொண்டிருக்கிறது.

நேற்று வரை இந்த செயற்கைக் கோள் 120 தடவை பூமியைச் சுற்றியுள்ளது என்றும், இந்தியா பற்றிய 100 புகைப்படங்களை எடுத்துள்ளது என்றும் இங்குள்ள இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிலையம் கூறியது.

அடுத்த 2 வாரங்களில்

(4-ம் பத்தி பார்க்க)

## சட்டசபையில் அண்ணாதாசன் பேச்சு:

# தொழிலாளர் நலனில் அக்கறை கொண்ட புரட்சிதலைவர் ஆட்சி

சென்னை, ஏப். 26- தொழிலாளர் நலனில் அக்கறை கொண்ட புரட்சித்தலைவர் ஆட்சி, தொழிலாளர் நலனுக்காக பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளதாக சட்டசபையில் கழக உறுப்பினர் அண்ணாதாசன் கூறினார்.

கழக எம். எல். ஏ. அண்ணாதாசன் பேசியதாவது:-

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் தொழிலாளர்களின் பால் இந்த அரசு எவ்வளவு அக்கறை காட்டியிருக்கிறது என்பதற்கு எடுத்துக்காட்டாக 1980 81 ஆவது ஆண்டும் 1981-82,வது ஆண்டும் தொழிற் தகராறுகளும் கதவடைப்புகளும், எந்த அளவுக்கு குறைக்கப்பட்டிருக்கிறது. எந்த அளவுக்கு அரசோடு ஒத்துழைத்து அரசு எடுக்கின்ற முறைகளில் நன்மை இருக்கிறது என்பது இந்த குறிப்பிலேயே கூறப்பட்டிருக்கிறது.

உதாரணத்திற்கு கோயம்புத்தூரில் எடுத்துக் கொண்டோர்களேயானால் — ஜோதி மில்ஸ் என்ற நிறுவனம், அங்கே தொடர்ந்து நட்டத்தை ஏற்படுத்தி, கதவடைப்பு செய்கிற சூழ்நிலை வருகிறபோது, தமிழக அரசு சார்பில், அதற்காக 50 லட்சம் ரூபாயை ஒதுக்கி, அந்த தொழிலை நிறுத்தக் கூடாது— தொழிலாளர்கள் பாதிக்கப்படக் கூடாது என்ற நல்ல நோக்கத்தில் — அடிப்படையில், அதற்கென்று ஒரு அதிகாரியை நியமித்து அதை இயக்கச் செய்தார்கள்.

### உடன்பாடு ஏற்பட்டது

அடுத்தது, கோயம்புத்தூரில் இருக்கின்ற ஜெயலக்ஷ்மி மில் தொழிலாளர்களுக்கு முதலமைச்சர் நிவாரண நிதியிலிருந்து 200 ரூபாய் முன் பணம் அளிக்க வேண்டும் என்று புரட்சித்தலைவர் தலைமையில் இயங்குகின்ற அரசுதான் ஆணையிட்டது!

திருச்சி மாவட்டத்தில் பீடித் தொழிலாளர்கள் 25 ஆயிரம் பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் போனஸ் வேண்டும் என்று நீண்ட நாள் கோரிக்கையாக தனி முதலாளிகளிடத்தில் கோரிக்கையினை வைத்தார்கள். கேட்டார்கள். ஆனால் அது கிட்டாத காரணத்தால் அவர்கள் 8-3-1983 அன்று வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர்.

அரசுஉடனடியாக அதிலே ஈடுபட்டு பேச்சுவார்த்தை நடத்தி வேலை நிறுத்தத்தை நிறுத்துவதற்கு ஏற்பாடு செய்தது.

அதன்படி உடன்பாடுகள் ஏற்பட்டன. அதனால் அந்தத் தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டிய ஊதியக் கொடை மற்றும் சம்பள உயர்வு ஆகியவற்றைக் கிடைக்கச் செய்தது தமிழக அரசு.

### ஏராள பணிகள்

இதுபோன்று ஏராளமான காரியங்களை, தொழிலாளர்களுக்கு நன்மை கிடைக்கக் கூடிய காரியங்களைப் புரட்சித் தலைவர் அரசு செய்திருக்கிறது. இவ்வளவு நன்மைகள் செய்யப்பட்டுள்ள முதல்வர் புரட்சித் தலைவரின் அரசு இருக்கின்ற இந்தக் கால கட்டத்திலேதான் என்பதைத் தைரியமாகவும் உறுதியாகவும் சொல்லிக்கொள்கிறேன். தொழிற்சங்க வரிசையில் இருந்து தூக்கி எறியப்பட்ட இந்த அண்ணாதாசன் முதல்வர் புரட்சித்தலைவர் அரசு வந்ததற்குப் பிறகுதான் இந்த அவைக்கு வரவழைக்கப்பட்டிருக்கிறான்.

### அன்றைய நிலை என்ன?

அன்றைக்கு இருந்த சூழ்நிலை என்ன? எத்தனை தொழிலாளர்கள் கண்ணீர் வடித்தார்கள் கதறி கதறி அழுதார்கள் என்பதை நான் கண்கூடாகப் பார்த்தவன் இன்றைக்கு அந்த நிலைமை எல்லாம் போக்கப் பட்டிருக்கிறது.

புரட்சித்தலைவர் அரசு தொழிலாளர்கள் அரசு என்ற ஒரு நல்ல சூழ்நிலையை நிரூபித்து காண்பித்து இருக்கிறது.

புரட்சித்தலைவர் அரசு தொழிலாளர்கள் மேல் பரிவு காட்டி, அக்கறை காட்டி அவர்களை அரவணைத்துக்கொண்டிருக்கிறது என்பதை நான் இங்கே மிக மகிழ்ச்சியோடும் பணிவோடும் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

தொழிலாளர்களுக்கு பாதகமாக இல்லாமல் தொழிலாளர்களுக்கு ஆதரவாக இருக்கிறது என்பதற்கு எடுத்துக்காட்டாகத்தான் இன்றைக்கு, இந்த சர்க்காரால் நிறைவேற்றப்பட்டிருக்கிற ஒரு சில சட்டங்களை இந்த அரசுக்கு என்ன சட்டங்களை இயற்றலாம் என்ற அதிகாரம் இருக்கிறதோ அந்த சட்டத்திற்கு உட்பட்டு இயற்றுகிற சட்டங்களுக்கு கூட மத்திய அரசு இதுவரைக்கும் அங்கீகாரம் அளிக்கவில்லை என்பதற்காகத்தான் அனைத்திந்திய அண்ணா தி.மு.க. தொழிற்சங்கப் பேரவை இன்றைக்கு மிகப் பெரிய பிரம்மாண்டமான ஒரு ஊர்வலத்தை கூட இன்றைக்கு மத்திய அரசுக்கு எடுத்துக்காட்டுகின்ற வகையில் நடத்துகிறது.

இவ்வாறு அண்ணாதாசன் பேசினார்.

## கழக எம்.எல் ஏ. குப்புசாமி பேச்சு

# நீதிபதிகளுக்கு அதிக வசதிகள் செய்தது இந்த ஆட்சியில்தான்

சென்னை, ஏப் 26- நீதிபதிகளுக்கு இந்த ஆட்சியில் தான் அதிக அளவில் வசதிகள் செய்து தரப்பட்டது என்று சட்டசபையில் கழக எம். எல். ஏ குப்புசாமி விவரங்களை எடுத்துக் கூறினார்.

நீதி நிர்வாகத் துறை மானியக் கோரிக்கை மீதான விவாதத்தில் கலந்து கொண்டு பேசுகையில் கழக உறுப்பினர் கே. குப்புசாமி கூறியதாவது:-

கழகம் தமிழகத்தில் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பிறகு நீதி நிர்வாகத்துறையில் ஒரு மலர்ச்சி ஏற்பட்டிருப்பதைக்காணலாம்.

### தமிழில் தீர்ப்புகள்

1976-ஆம் ஆண்டு முதல் இன்றுவரை கிரிமினல் வழக்குகளில் தமிழ்மொழியில் எந்த அளவிலே பயன்படுத்த வேண்டுமோ அந்த அளவில் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. மக்கள் நீதிமன்றத்திலே என்ன நடைபெறுகின்றது என்பதை உணர்ந்து கொள்கின்ற முறையிலே இன்றைக்கு தமிழ் பயன்படுத்தப்பட்டு வருகிறது என்பதை நான் பெருமையோடு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இப்பொழுது நீதிமன்றங்களிலே தீர்ப்புகள் தமிழிலே எழுதப்பட்டு வருகின்றன.

இப்போது நீதிமன்ற தீர்ப்புக்கள் அது கிரிமினலாக இருந்தாலும் சரி, சிவிலாக இருந்தாலும் சரி, உயர்நீதி மன்றம் வரை, இரண்டுமே தமிழில் எழுதக்கூடிய நிலையை அரசு விரைந்து ஏற்படுத்த முன்வர வேண்டும்.

தமிழகத்திலே இருக்கின்ற பல்வேறு கிராமப்புற பகுதியிலே வாழ்கிற பல்வேறு வழக்கு மன்றங்களுக்கு செல்கிறவர்களுக்கு துணை புரிகின்ற வகையில், மாவட்டங்களிலே, தலைநகரங்களிலே இருக்கிற நீதிமன்றங்களை எல்லாம், அதன் பிரிவுகளை ஆங்காங்கு இருக்கிற சிற்றூர்களிலும் பேரூர்களிலும் பரவலாக்கியது புரட்சித் தலைவர் அரசுதான்.

அத்தோன்று இந்த அரசு பொறுப்பேற்றதற்குப் பிறகு நீதித் துறைக்கு, நீதிபதிகளுக்காக எந்த அளவுக்கு பயனுள்ள காரியங்களைச் செய்திருக்கிறது என்பதை. ஏற்கனவே அரசின் சார்பிலே இங்கே கருத்துக்கள் எடுத்து வைக்கப்பட்டிருக்கின்றன. நீதிபதிகளுக்கு இப்போது வீட்டு வசதி, கார் வசதி, ஜெராக்ஸ் மெசின் வசதி போன்ற வசதிகளை எல்லாம் இந்த அரசு செய்திருக்கின்றது 1960-க்குப் பின்னாலே தமிழகத்திலே வழக்கறிஞர்கள் மாஜிஸ்திரேட்டுகளாக நியமனம் ஆக முடியாத நிலைமை இருந்தது. ஏ.பி.பி.க்களாக ஆக முடியாத நிலையிருந்தது அண்மையிலே கூட அரசினுடைய அறிக்கையை நான் பார்த்தேன். கிட்டத்தட்ட 25 ஆண்டுக் காலத்திற்குப் பின்னாலே வழக்கறிஞர்கள் எல்லாம் இன்று மாஜிஸ்திரேட்டுகளாக நியமிக்கப்பட்டிருக்கிற நிலைமையை நாம் பார்க்கிறோம். வழக்கறிஞர்கள் பலர் ஏ. பி. பி.களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அதை வழக்கறிஞர்கள் சமுதாயத்தின் சார்பிலே நான் நன்றியோடு பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இவ்வாறு குப்புசாமி பேசினார்.

# மரம் விழுந்து 2 பெண்கள் சாவு: 8 பேர் காயம்

கோழிக்கோடு ஏப். 26- ஒரு பள்ளிக் கட்டிடத்தின் மீது தென்னை மரம் ஒன்று முறிந்து வீழ்ந்துக் கட்டிடம் நொறுங்கியது.

இதனால் அந்தக் கட்டிடத்தில் ஒரு நிகழ்ச்சியை பார்த்துக் கொண்டிருந்த 8 பேர் படுகாயம் அடைந்தனர். 2 பெண்கள் உயிரிழந்தனர்.

இந்தச்சம்பவம் கோழிக்கோடு அருகே பருகரா என்ற இடத்திலநடந்தது.

(6 ம் பத்திதொடர்ச்சி)

செயற்கைக் கோளில் உள்ள காமிரா இந்தியாவைப் பற்றி புகைப்படம் எடுப்பதற்கில்லை என்னில் இந்தியா மீது இந்த செயற்கைக்கோள் செல்கையில் ஒன்று காலையாகவோ அல்லது மாலையாகவோ இருக்கும்.

அப்போது புகைப்படங்கள் எடுப்பதற்கு வேண்டிய சூரிய வெளிச்சம் இராது.

இங்குள்ள செயற்கைக் கோள் நிலையத்திற்கு ரோஹிணியிலிருந்து சமிக்ஞைகள் வந்து கொண்டிருக்கின்றன.

கடந்த 17-ந்தேதி ஸ்ரீ ஹரிகோட்டாவிலிருந்து ரோஹிணி செயற்கைகோள் விண்ணில் ஏவப்பட்டது தெரிந்ததே.

## மக்கள் நலன் கருதி செயல்படுத்தும்

# அரசு திட்டங்களை நன்கு பிரசாரம் செய்ய வேண்டும்

## கழக எம் எல் ஏ. நாராயணன் பேச்சு

சென்னை. ஏப. 26. மக்கள் நலன் கருதி அரசு செயல்படுத்தும் திட்டங்களை மக்கள் மத்தியில் நன்கு விளம்பரம் செய்ய வேண்டும் என்று சட்டசபையில் கழக உறுப்பினர் பி. ஜி. நாராயணன் கூறினார்.

மாவட்ட ஆட்சித் தலைவர் மாவட்ட நிர்வாக மானியக்கோரிக்கை மீதான விவாதத்தில் கலந்து கொண்டு பேசுகையில் கழக உறுப்பினர் பி. ஜி. நாராயணன் கூறியதாவது:—

நிர்வாகம்திறமையாகவும் செம்மையாகவும் நடத்த மாவட்டங்களை, வட்டங்களைப் பிரித்து பரப்பைசிறிதாக்க வேண்டியுள்ளது. அந்த அடிப்படையில்தான் பெரியார் மாவட்டம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. மாவட்ட நிர்வாகத்தைப் பொறுத்தவரையில் இப்பொழுது செயல்பட்டு வரும்டி.டி.சி என்கிற மாவட்ட வளர்ச்சி மன்றம் பயனுள்ள வலுவுள்ள அமைப்பாக மாற்றப்பட வேண்டும்.

மாவட்ட வளர்ச்சி மன்றத்தில் நிறைவேற்றப்படும் தீர்மானங்களை எடுக்கின்ற முடிவுகளை அரசு மறுக்காமல் ஏற்று நிறைவேற்றினால் தான் மாவட்டம் வேகமாக வளர்ச்சியைப் பெற முடியும். மாவட்ட வளர்ச்சி மன்றத்திற்கு அமைச்சரோ அல்லது யாராவது ஒரு மக்கள் பிரதிநிதி தலைமை தாங்கி நடத்திடவும், அங்கே எல்லா துறை அதிகாரிகளும் இருப்பதால் அவ்வப்போது எழுகின்ற பொது முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினைகளை பற்றியும் ஏற்கனவே அறிவிக்கப்பட்ட பொருள்களோடு சேர்த்து விவாதிக்க தேவையான மாற்றத்தை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மாவட்ட அளவில் வளர்ச்சிப்பணிகளை கவனிக்க மாவட்ட வளர்ச்சி அதிகாரி ஒருவரை நியமித்தால வளர்ச்சிப்பணிகள் செம்மையாகவும், விரைவாகவும் நடக்க வாய்ப்பாக இருக்கும் எனக் கருதுகிறேன்.

மக்களின் நலன் கருதி அரசு அறிவிக்கும்திட்டங்களை கிராம மட்டத்தில் மக்களுக்குவிளம்பரத்தின் மூலம் அறிமுகப்படுத்த வேண்டும்.

### பொருளாதார மேம்பாடு

ஏழை எளிய மக்களின் பொருளாதார மேம்பாட்டுக்காக பல்வேறு கடன் உதவி, தற்காலிக கடன் போன்ற சலுகைகள் புரட்சித்தலைவர் ஆட்சியில ஏராளமாக அளிக்கப்படுகின்றன. கிராமத்தில் ஏழை மக்களிடத்தில் அது பற்றிவிளம்பரம் செய்யாததால் அத்திட்டங்களின் முழு பலனை

(8-ம பத்தி பார்க்க)

## நாளொன்றுக்கு

# மதுரை நகரில் 100 லட்சம் காலன் குடி நீர் சப்ளை

மதுரை, ஏப். 26- மதுரை நகரில் இது வரை ஒரு நாள் விட்டு ஒரு நாள் குடிநீர் சப்ளை செய்யப்பட்டு வந்தது தற்போது தினந்தோறும் 100 லட்சம் காலன் குடிநீர் சப்ளை செய்யப்படுகிறது.

தமிழகம் எங்கும் கடும் வறட்சி நிலை ஏற்பட்டுள்ளது தெரிந்ததே.

வறட்சியின் விளைவாக மதுரை நகரில் ஒரு நாள்விட்டு ஒருநாள் குடிநீர் சப்ளை செய்யப்பட்டு வந்தது. அதுவும், 32 லட்சம் காலன் தண்ணீர் சப்ளை செய்யப்பட்டு வந்தது.

தற்போது வைகை அணையில் இருந்து வைகை ஆற்றில் தண்ணீர் திறந்து விடப்பட்டதால், மதுரை நகருக்கு அதிக அளவில் குடிநீர் சப்ளை செய்ய மாநகராட்சி நடவடிக்கைகளை மேற்கொண்டது.

இதன்படி இதுவரை ஒருநாள் விட்டு ஒரு நாள் 32 லட்சம் காலன் தண்ணீர் சப்ளை செய்யப்பட்டு வந்ததை தினந்தோறும் 100 லட்சம் காலன் தண்ணீராக உயர்த்தப்பட்டுள்ளது.

இதையடுத்து தெருக் குழாய்களில் வழக்கமாக காணப்படும் கூட்டம் குறைந்து விட்டது.

இந்தத் தகவல்களை மாநகராட்சி அதிகாரி ஒருவர் தெரிவித்துள்ளார்.

(6-ம் பத்தித்தொடர்ச்சி)

ஏழைகளுக்குக் கிட்டாமல் விவரம் தெரிந்த பணக்காரர்கள் ஏழை மக்களிடம் கைநாட்டைப் பெற்று கடன் தொகையைப் பெற்று அதன் பலனை அனுபவித்து வரும் பரிதாப நிலை உள்ளது.

ஆகவே மக்கள் தொடர்புத்துறை மூலம் அரசு திட்டங்களை கிராம மட்டத்தில் ஏழை மக்களிடம் தெளிவாக விளம்பரம் செய்ய வேண்டும்.

தலைமை செயலகத்தில் அலுவலர்கள் இருக்கையிலிருந்து தேவையில்லாமல் வெளியே சல்லக் கூடாது என்பதற்காக வெளியே செல்லும்போது காரணங்களைப் பதித்து விட்டு செல்ல வேண்டும் என்ற நடைமுறை வரவேற்கக் கூடிய ஒன்றாகும்.

தலைமைச் செயலகத்தில கோப்புகள் தாமதத்தைத் தடுக்க சில சீர்திருத்தத்தை மேற்கொள்ள வேண்டும்.

இவ்வாறு நாராயணன் பேசினார்.

நாடாளுமன்றத்தில் இன்று விவாதமின்றியே

## ரூ 10 ஆயிரம் கோடி மானிய கோரிக்கை நிறைவேறு கிறது

புதுடெல்லி, ஏப். 26— மக்களவையில் விவாதமின்றியே 10 ஆயிரம் ரூபாய் கோடி, மானியக் கோரிக்கை இன்று நிறைவேறுகிறது.

மக்களவையில் ஒரு மாதமாக நடக்கும் விவாதங்கள் இன்று ஒரு முடிவுக்குக்கொண்டு வரப்படும். சபாநாயகர் விவாதமின்றியே 15 அமைச்சுகள் மற்றும் 8 துறைகளுக்கான மானிய கோரிக்கைகளை ஓட்டுக்கு விடுவார். இதன் மதிப்பு ரூ. 10 ஆயிரம் ஆகும்.

தகவல் தொடர்பு ரசாயனம் மற்றும் உரங்கள் கப்பல் மற்றும் போக்குவரத்து, உருக்கு மற்றும் சுரங்கங்கள், சுகாதாரம் மற்றும் குடும்பநலம் பொதுப் பணி மற்றும் வீட்டுவசதி போன்றமுக்கிய அமைச்சுத் துறைகள பற்றிய விவாதம இந்த ஆண்டு நடை

6ம பததி பாாக்க

வேலை இல்லை-உணவு இல்லை குடிக்க தண்ணீரும் இல்லை:

## ராஜஸ்தான மாநிலத்தை விட்டு 50 ஆயிரம் மக்கள் வெளியேறினர்

ஜெய்ப்பூர், ஏப். 26. கடும் வறட்சி காரணமாக, ஆடு மாடுகளுடன் 50 ஆயிரத்திற்தும் மேற்பட்ட மக்கள் ராஜஸ்தான் மாநிலத்தை விட்டே வெளியேறி வேறு மாநிலங்களுக்கு சென்று விட்டனர்.

ராஜஸ்தான் மாநிலம் கடும் வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ளது.

இதன் விளைவாககடும் குடிநீர் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளது. வேலை ஏதும் இன்றி மக்கள் பெரும் அவதிக்கு ஆளாகி உள்ளனர்.

வைக்கோல் கிடைக்காததாலும், தண்ணீர் இல்லாததாலும் கால் நடைகள் நிலை பரிதாபமாக உள்ளது.

ஜெய்சால்மர், பாமர், மற்றும் ஜோத்பூர் மாவட்டங்களில் இருந்து ஆயிரக்கணக்கான மக்கள் ஆடு மாடுகளுடன் கிராமங்களை காலி செய்து விட்டு அண்டை மாநிலங்களுக்கு சென்று விட்டனர்.

### சாரிசாரியாக...

ராஜஸ்தான் மாநில நெடுஞ்சாலைகளில் மக்கள் மூட்டை முடிச்சுகளுடனும், ஆடுமாடுகளுடனும், குழந்தைகளுடன் சாரிசாரியாக செல்லுவதைக்காண முடிகிறது.

குடிநீர் பற்றாக்குறை காரணமாக மக்கள் அசுத்தமான தண்ணீரை பயன்படுத்துவதின் விளைவாக பேதிபோன்ற நோய்கள் பரவி வருகிறது.

இந்த நோய்கள் காரணமாக இதுவரை 120 பேர் இறந்து விட்டனர்.

## புரட்சித்-தலைவரை ஜெகஜீவன்ராம் சந்தித்தார்

சென்னை, ஏப். 26— சென்னை வந்த காங்கிரஸ் (ஜே) தலைவர் ஜெகஜீவன்ராம் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்து பேசினார்.

இந்த சந்திப்பு வெறும்மரியாதைகாரணமானசந்திப்பே. தவிர அரசியல் பற்றி எதுவும் பேசவில்லை என்று ஜெகஜீவன்ராம் கூறினார்.

பெங்களூரில் கூடிய தென்னக முதல்வர்கள் மாநாடு பற்றிக் கூறிய ஜெகஜீவன்ராம், இதனால் எந்த ஆபத்தும் இல்லை. எனவே அதற்கு 'பிரிவினை' என்ற சாயம் பூசத் தேவையில்லை. என்று கூறினார்.

'அண்ணா'வில் விளம்பரம் செய்து பயன் பெறுங்கள்

## நமது மேடை

### 110-வது வட்டம்

நாள்: 26—4—83 இன்று மாலை 7 மணி. இடம்: அம்மன்கோவில் திடல், தலைமை: பி. தாஸ், முன்னிலை: ஆர். தீர்த்தகிரி, வரவேற்புரை: வி. ஏழுமலை, ஏ. வி. கோபி, பேசுவோர்: ஜி. விஸ்வநாதன் எம். எல். ஏ., என்.வி.என். செல்வம், நாஞ்சில் மணிமாறன், கு.க. செல்வம், தி. நகர் மூர்த்தி, சா. கோவிந்தசாமி, வி. கு. சச்சிதானந்தம், நா.ரா. தாளமுத்து செ. சுந்தரம், கே. தட்சிணாமூர்த்தி, து. மதிவாணன், இரா. பாண்டியன், எம். ஜி. ஜீவா, து. முருகன், மு. மணிமாறன் பி. வி. கிருஷ்ணன், கே. ரகுபதி, கே. மாதவன், எம். ராஜகோபால், து. மனோரஞ்சிதம் மற்றும் பலர்.

நன்றியுரை பி. ஓ. மனோகரன்.

### 39வது வட்டம்

நாள்: 27.4.83 புதன் மாலை 7 மணி. இடம்: சுந்தரம் பிள்ளை தெரு. தலைமை: வி. சண்முகம் முன்னிலை: புரசை குமார்.

வரவேற்புரை: புரசை மணியன், பேசுவோர்: சீர்காழி பாலசுப்பிரமணியன் எம்.எல்.ஏ., இ. மதுசூதனன், லியாகத் அலிகான், பா. வளர்மதி, தரங்கை கண்ணன், வா. நீலகண்டன். மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கோ. ஆ. ஜார்ஜ், முருகன், ஏசேகர், சுபரமணி, ஞானப்பிரகாசம் மற்றும் பலர்.

கூட்ட அமைப்பு: வாசுதேவபிள்ளை தெரு. எம். ஜி. ஆர். மன்றம்.

### சிக்கராயபுரம்

நாள்: 28.4.83 வியாழன் மாலை 7 மணி. இடம்: குன்றத்தூர் ஒன்றியம் சிக்கராயபுரம், பேசுவோர்: ஜேப்பியார் எம். எல். சி., கு. க. செல்வம், தி.நகர் மூர்த்தி வ. கோதண்டராமன், ஜெ. பாலன், எம். வி. ராமன், எஸ். ஜெகந்நாதன் பிள்ளைபாக்கம் மூர்த்தி, பா. சிதம்பரம். மாசிலாமணி, துரை, மனோகரன் மற்றும்பலர்.

### பாலூர்

நாள்: 27.4.83 புதன் மாலை 7 மணி இடம், பாலூர் துவக்கப்பள்ளி அண்ணாதிடல். தலைமை சி. மண்ணாங்கட்டி, முன்னிலை: வே. பலராமன், வரவேற்புரை: தா. ஜானகிராமன் பேசுவோர் ஐசரிவேலன், துரை அன்பரசன், ஆர். சாரங்கபாணி வா. வீரராகவன் சக்திசிவ பூஷணம், இரா. சிவராஜ், காசிநாதன், பாண்டுரங்கன், அமீது, சஞ்சல்மல், ஜலீல், மற்றும பலர் நன்றியுரை: ஆர். விஜி. கூட்ட அமைப்பு: பாலூர் கழகக் கிளை.

### திண்டுக்கல்

நாள்: 27.4.83 புதன் மாலை 7—மணி. இடம்,

மேட்டு ராஜபட்டி ஸ்ரீ கிருஷ்ணன் கோயில் அருகில். தலைவர்: ஏ. காளிமுத்து, முன்னிலை: கே. சுப்பிரமணி சி. பெரியசாமி, சின்னையா, பி. சுப்பிரமணி, வரவேற்புரை:- சீனிவாசன், தியாகராசன், தாஸ், வி. கோபாலகிருஷ்ணன், பாண்டித்துரை, பேசுவோர்:- மதுரை இளவரசன். இரா. முத்தையா. எம். எல். ஏ. வி. பி. பாலசுப்பிரமணியம் எம். எல். ஏ., சிவநாத்பாபு, மு. காதர் சா, சி. முத்து மற்றும்பலர், நன்றியுரை: சி. அன்பு, கூட்ட அமைப்பு:- திண்டுக்கல் 12-வது வட்ட கழகக் கிளை.

### எம்.ஜி.ஆர். மன்ற தொடர் கூட்டங்கள

26.4.83 புரசை 32, 33-வது வட்டம் சிறப்புரை: கேரளசுந்தரம். 27.4.83 தி.நகர் 113-வது வட்டம் சிறப்புரை: கேரளசுந்தரம் 28.4.83. ஆயிரம்விளக்கு 106-வது வட்டம், துறைமுகம் 46-வது வட்டம் சிறப்புரை:- கேரள சுந்தரம், 29-4-83 மயிலை 149-வது வட்டம் சிறப்புரை, கேரள சுந்தரம் துறைமுகம், சிறப்புரை: பி.டி. சரஸ்வதி 30.4.83 திருவல்லிக்கேணி 91 வது வட்டம், சிறப்புரை:- கேரள சுந்தரம் 6.5.83 இராயபுரம், சிறப்புரை: பி.டி. சரஸ்வதி:

7.5.83 பெரம்பூர் 25வது வட்டம சிறப்புரை:- பி.டி. சரஸ்வதி 8.5.83 தி நகர் 8 வது வட்டம் சிறப்புரை பி.டி. சரஸ்வதி.

மேற்கண்ட கூட்டங்களில் சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற செயலாளர் மதுசூதனனும் கலந்து கொள்கிறார்.

அமைச்சர் திருநாவுக்கரசுபேச்சு:

## தொழிற் கல்வி தரும் வகையில் பாடங்கள் இருக்க வேண்டும்

சென்னை, ஏப். 26. மேலை நாடுகளில் உள்ளது போல் பாடங்கள் தொழிற் கல்வி தருவதாக இருக்க வேண்டும் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

உலக இளைஞர்கள் தினம் ஒருமைப்பாட்டுத் தினம் சோவியத் கலாசார மையத்தில் இளைஞர்கள் சங்கத்தின் சார்பில் நடத்தப்பட்டது.

அதில் கலந்து கொண்டு அமைச்சர் திருநாவுக்கரசு பேசியதாவது:-

சோவியத் யூனியன் இந்தியாவின் உற்ற நண்பன். உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே இடுக்கண் களையும நல்ல நண்பன். உலக அமைதி, சமாதானத்திற்கு உதவும் நல்ல நாடு.

உலக இளைஞர்கள் ஒருமைப்பாட்டு வழா இங்கு நடப்பது பொருத்தமான ஒன்று.

ஒரு நாட்டின்வளத்தை செல்வத்தைக்குறிப்பிடும் போது மனித சக்தியையும் ஒரு செல்வமாகக கூறுவதுண்டு.

### இளைஞர்கள் நாட்டின முதுகெலும்பு

மனித வாழ்வில் இளமைக்காலம்கனவு காணும் பருவமல்ல. காரியம் ஆற்றும் காலம். இளைஞர்கள் ஒரு நாட்டின் முதுகெலும்பு போனறவர்கள் தன்னம்பிக்கை, சுயமுயற்சி, சுயஉழைப்பு ஆகிய உணர்வுகள் இளைஞர்கள் உளளத்தில்வளர வேண்டும். இளைஞர்களின் பங்கு இன்று உலகம முழுவதும் அரசியல், சமூக பொருளாதார மாறுதல்களில் பெரும் பான்மையானதாகவும், தவிர்க்க இயலாததாகவும் வளர்ந்து வருகிறது.

மனித குலத்தின அமைதி, பொருளாதார முன்னேற்றம் சமூக முன்னேற்றம் ஆகியவற்றில இளைஞர்கள் இன்னும அதிகபங்கு ஏற்கவேண்டும.

இளைஞர்களாக இருக்கும போது சாதிக்க இயலாத எந்த வயதாகச் சாதிக்க இயலும். கூட்டுக குடும்ப அமைப்பு எனும பெயரில் பாதுகாப்பில பெற்றோரை, உறவினரை நம்பி வாழ்க்கையை ஓட்டுவதை— விடவலமாக இளைஞர்கள எடுததுக கொளளல் வேண்டும. மேலை நாடுகளில் இளைஞர்கள் 18 வயது வந்தவுடன சுயமாக உழைதது சமபாதித துவங்கு கின்றனர்;

நம் இந்திய நாட்டில் தான் கூட்டுக்குடும்பம் என்று கூறி 50 வயது வரை பெற்றோரை நம்பி தன் பிள்ளைகளையும் விட்டுச் செல்லும் நிலை உள்ளது.

இளைஞர்களின் திறமை, சக்தி இந்தியாவின் வளர்ச்சிக்கு இன்னும் முழு அளவில் கிட்டவில்லை, படித்த பட்டதாரி இளைஞர்கள் கூட உழைக்கும சக்தி வாய்ப்பு இல்லாது உள்ளனர்.

பாடங்கள் மேலை நாடுகளில் உள்ளது போல் தொழிற் கல்விகளைத் தருவதாக உருவாக்கப் பட வேண்டும்.

இளைஞர்கள் நலிந்த பிரிவினருக்கு உதவுதல், முதியோர்க்கு கல்வி தருதல் ஆதிதிராவிடர்கள் வாழும் பகுதிகளில் அவர்கள் மேம்பாட்டுக்கு உதவுதல், ஜாதி, மத, உணர்வுகளால் ஏற்படும் சச்சரவுகளைக்கண்டித்தல் ஆகியவற்றில் முதலிடம் பெற வேண்டும்.

தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் இளைஞர்களைஉற்சாகப் படுத்தி ஆதரிப்பவர் அவர்களின் சக்தி நாட்டுக்குப் பயன் படவேண்டும் என நினைப்பவர்.

இளைஞர்கள் வாய்ப்புக்களை உருவாக்கி, பயன் படுத்தி தன்னம்பிக்கை முயற்சி உழைப்பு ஆகியவற்றை லட்சியங்களாகக் கொண்டு தானும் உயர்ந்து சமூகத்தையும் உயர்த்த வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்

### தீ விபத்து: உதவி பணம்

கடலூர், ஏப். 26— கள்ளக் குறிச்சியை அடுத்த டாக்சி மங்கலம் கிராமத்தில் ஏற்பட்ட தீ விபத்தில் 92 குடும்பத்தினர்பாதிக்கப்பட்டனர். அவர்களுக்கு அரசின் நிதி உதவி தலா 200 ரூபாயும் அரிசியும வழங்கப்பட்டுள்ளது விருத்தாசலம் உதவி கலெக்டர் புகழும் பெருமாள் இவைகளை வழங்கினார். தாசில்தார மணிவேல். போலீஸ் துணை சூப்பிரண்டு இராமச்சந்திரன ஆகியோர் உடன் இருந்தனர்.

பாராட்டுக்குரியது தான் ஆனால்

## காந்தி படத்தில் தென்னகம் முழுமையாக இருட்டடிப்பு ஏன்?

சட்டசபையில் அமைச்சர் ஆர். எம். வீ. கண்டனம்

சென்னை, ஏப். 26- காந்தி படம் மிகச்சிறந்த முயற்சி தான். ஆனால் அந்தப்படத்தில் தென்னகம் முழுவதும் இருட்டடிப்பு செய்யப்பட்டு இருக்கிறது. இது துரதிருஷ்ட வசமானதுஎன்று சட்டசபையில் அமைச்சர் ஆர்எம்வீ. கூறினார்.

மகாகவி பாரதியாரின் முழுநீள வரலாற்று திரைபடம் தயாரிக்கும் கருத்து அரசின் பரிசிலனையில உள்ளது என்றும் அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

சட்டசபையில் கழக உறுப்பினர் தாமரைக்கனி கேள்விக்குப் பதில் அளிக்கையில் அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது:—

மகாகவி பாரதியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி மகாகவி பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றினை முழு நீள திரைப்படமாகத் தயாரிக்கும் கருத்துரு அரசின் பரிசீலனையில் உள்ளது.

இந்தத்திரைப்படத்தை தயாரிப்பதற்கு தமிழகத்லேயே திறமைமிக்கவர்கள் இருக்கிறார்கள்.

முதல்வரே இந்தப் படத்திற்கு மேற்பார்வை இடுவதாக மேலவையில் தெரிவித்து இருக்கிறார்.

பாவேந்தர் பாரதிதாசன் தமது இறுதிக் காலத்தில் பாரதியின் வரலாற்றை திரைப்படமாக எடுக்க முயற்சித்தார் என்றும் அதற்காக கதை வசனம் போன்றவற்றை எழுதி வைத்திருந்தார் என்றும் அரசுக்கு ஒரு கருதது வந்திருக்கிறது.

அவை யாரிடம் இருக்கிறது என்று தெரியவில்லை.

அது கிடைக்குமானால் அதையும அரசு பரிசீலிக்கும்.

பாரதியைப் பற்றி படம் எடுக்கும்போது அவரது வாழ்க்கையில முக்கியமாக இடம்பெற்றவர்கள். படத்தில் இடம பெறுவார்கள்.

காந்தி படம் எடுக்கப் பட்டது மிகச்சிறந்த முயற்சி. பாராட்டுக்குரியது.

காநதிஜியைப் பற்றி படம் எடுத்து இருககிறேன் என்று அட்டன் பரோ கூறியிருக்கிறார். காநதி படதநில் வடக்கு, கிழக்கு, மேற்கு பகுதி தலைவர்கள் இருக்கிறார்கள். தெற்கு பகுதி என்ற ஒன்று இந்தியாவிலேயே இல்லை என்பது போல அநதப் படம் இருக்கிறது.

4 மொழி பேசும தென பகுதியை படததிலேயே நீககிவிட்டார்களா அல்லது ஏறறுக் கொள்ள வில்லையா என்று தெரியவில்லை.

அட்டன் பரோவுக்குத் தெரியவில்லையென்றாலும் கதையை ஏற்றுக கொண்டவர்களுக்குத் தென் பகுதி தெரியவில்லையா?

காந்திஜியின் வாழ்க்கையில் எளிய உடை அணியும்நிகழ்ச்சிநடந்தது தென் மாநிலத்தில் தான்.

அதைச் சேர்த்திருந்தாலாவது சிறப்பாக இருந்து இருக்கும்.

துரதிஷ்ட வசமாக அதை எபபடியோ விட்டு இருக்கிறார்கள்.

ஆனால் இந்த நூற்றாண்டின் கவிஞர் சமுதாயகக் கவிஞர் மகாகவி பாரதியாரைப பற்றி படம்எடுக்கும் பொறுப்பை இநதியாவிலேயே திரைப் படத் துறையில் மிகச் சிறந்தவரான முதல்வர் புரட்சித் தலைவர் மேறபார்வையிடுவதாகச் சொல்லி இருக்கிறார்.

அப்படம் திரையிடப்படும போது தமிழகததில் தோன்றிய புரட்சிககவி பாரதியை அனைவரும் தெரிந்து கொள்ளும் நிலை உருவாகும.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

### ரூ. 18 கோடியில் புதிய மின் திட்டம்: பண்ருட்டியார் தகவல்

சென்னை, ஏப். 26— ரூ. 17.5 கோடி செலவில் பரணி ஆறு மின் உற்பத்தி திட்டம் பற்றி சட்டசபையில் அமைச்சர் பண்ருட்டியார் கூறினார்.

சட்டசபையில் கேள்வி நேரத்தினபோது பதிலளிக்கையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:-

பரணி ஆறு மற்றும் அதன் கிளை ஆறுகளில் கிடைக்கக் கூடிய நீரைப் பயன்படுத்தி சுமார் 25 மெகாவாட் மின் சாரம் உற்பத்தி செய்வதற்கான சாத்தியக் கூறுகள் மின் வாரியததால ஆராயப்பட்டு வருகிறது.

இதுபற்றிய திட்டம் ஏற்கனவே மத்திய அரசுக்கு அனுப்பப்பட்டு அது பரிசீலிககப்பட்டது.

மின உற்பத்திச் செலவு அதிகாககும் என்பதால் திருப்பி அனுப்பப்பட்டது.

இத்திட்டம் மீண்டும் பரிசீலித்து அனுப்பப்பட இருககிறது.

இதறகு ரூ. 17.5கோடி செலவாகும்.

இதனால் 7.5 கோடி யூனிட் மின்சாரம கிடைககும.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

ஏகாம்பரேசுவரர் கோயிலில

### 2 ஆயிரம் பேருககு குடி நீர் வசதி

சென்னை, ஏப் 26— சென்னை தங்கசாலையில் உள்ள ஏகாம்பரேசுவரர் கோவிலில் உள்ள தெப்பக்குளத்தில் ரூ. 40 ஆயிரம் செலவில் தூர் எடுக்கும் பணி நடந்து வருகிறது.

இந்தப் பணி முடிந்தவுடன், குளத்தில் உள்ள ஊற்று மூலம் தினந்தோறும் 2 ஆயிரம் பேருக்கு குடிநீர் அளிக்க முடிவு செய்யப்பட்டுள்ளது

இந்தத் தகவலை அறங்காவலர் குழுத் தலைவர் வி. எம். பரமசிவ முதலியார் மற்றும் செயல் அலுவலர் ரத்தினசபாபதி ஆகியோர் தெரிவித்துள்ளனர்.

1ம் பக்கத் தொடர்ச்சி

பெறாது.

இது போல பிரதமரின் நிர்வாகத்திலுள்ள அணுசக்தி, விஞ்ஞானம். தொழில் நுட்பம், வான வெளி ஆய்வு போன்ற துறைகள் பற்றியும் விவாதமின்றியே மானியக் கோரிக்கையை சபை நிறைவேற்றும்.

மார்ச்23-ந் தேதிதுவங்கிய விவாதத்தில் பல அமைச்சுத் துறைகளும இடம் பெறும் வகையில் பட்டியல் போட்டிருந்தது ஆனால் இதுவரை 8 துறைகளைப் பற்றியே விவாதம நடந்து ஓட்டெடுப்பும் முடிந்துள்ளது.

29 வது
கைத்தறிக் கண்காட்சி '83
கோ-ஆப்டெக்ஸ் மைதானம் பாந்தியன் சாலை, எழும்பூர்

27.4.1983 புதன்கிழமை
மாலை 6-30
வரவேற்புரை: திரு. எஸ். துரைசாமி அவர்கள்
தலைவர்: திரு. ம. சின்னசாமி எம்.எல்.ஏ. அவர்கள் தலைவர், தமிழ்நாடு குழாய்க்கிணற்றுக் கழகம்
பேச்சாளர்கள்: திரு. கே. ஜி. கிருஷ்ணசாமி எம்.எல்.ஏ. அவர்கள்
திரு. ஆற்காடு நா. வீராசாமி எம்.எல்.சி. அவர்கள்
திருமதி மந்தாகினி கிருஷ்ணமூர்த்தி எம்.எல்.சி. அவர்கள்
நன்றியுரை திரு. க. ஆறுமுகம் அவர்கள்
இரவு 7-30 கலை நிகழ்ச்சி: கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் நாடக மன்றம்
இரவு 8-30 நாடகம்: "நீதி எங்கே?" (நவசக்தி நாடக சபா)

சிறப்புத் தள்ளுபடி
20% முதல்
40% வரை

கோ-ஆப்டெக்ஸ் கைத்தறி

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.

Editor: E. PARASURAMAN